கதரின் விலை கஜம் 11 அணுவாயிருந்தது. இது இப்போது 7 அணுவுக்குக் குறைந்திருக்கிறது. இவ்வாறே 45" அகலக் கதர் 12 அணுவிலிருந்து 9 அணுவுக்கும், 50" கதர் 14 அணுவிலிருந்து 10 அணுவுக்கும், 54" கதர் ஒரு ரூபாயிலிருந்து 11 அணுவுக்கும் விலையில் குறைந்து விட்டன. பருத்தி விலைக் குறைவும் இதற்கு ஓரளவு காரணமாகும். இன்னமும் உற்பத்திச் செலவு நாளுக்குநாள் குறையக்கூடுமென்று காணப்படுகின்றது. ஆனால் இதுமட்டுமன்று. விலை விகிதங்களை ஒப்பிட்டுப் பார்ப்பதில் துணியின் உழைப்பாட்டையும் கவனிக்கவேண்டும். கதர் இயக்கம் இன்னும் ஆரம்ப தசையிலேயே இருந்து வருகிறது. எனவே தற்போது உற்பத்தியாகும் கதர்த் துணிகளின் உழைப்பாட்டைக் குறித்துத் திட்டமாக ஒன்றும் சொல்வதற்கில்லை. எனினும் சிறிது யோசித்துப் பார்த்தால் கைவில்லினால் கொட்டிக் கையினால் நூற்றநூல் ஆலை நூலைக்காட்டிலும் உழைப்புடையதாகவே இருக்கவேண்டுமென்பது தெளிவாக விளங்கும். இந்தூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த ஒரு நிபுணர் "இராட்டை நூல்" என்னும் பெயருடன் ஒரு துண்டு பிரசுரம் வெளியிட்டிருக்கிறார். அதில் அவர் ஆலையில் நூற்கும் முறைகளையும் கையினால் நூற்கும் முறைகளையும் மிக நுட்பமாக ஆராய்ந்து தக்க ஆதாரங்களுடன் இராட்டை நூல் ஆலை நூலைவிட எல்லாவகையிலும் சிறந்தது என்று முடிவுகட்டியிருக்கிறார். முற்காலத்தில் இந்தியாவில் உற்பத்தியான கதர் அன்னியத் துணியைவிட மேம்பட்டதாயிருந்தது என்பது பிரசித்தியான விஷயம். இந்தியாவுக்கு வந்த அயல்நாட்டுப் பிரயாணிகள் ஒவ்வொருவரும் இந்தியத் துணியின் விலை மலிவைப்பற்றியும், உழைப்பாட்டைப் பற்றியும் எழுதிவைத்திருக்கிறார்கள். 1866-ம் ஆண்டில்கூட மிஸ்டர் போர்ப்ஸ் வாட்ஸன் என்பவர் சுதேசிக் கைநூலினாலான துணியின் மேன்மையை ஒப்புக்கொண்டிருக்கிறார். இனி வரும் காலத்திலும், கதர் இயக்கம் நிலையான அஸ்திவாரத்தின்மீது அமைக்கப்பட்டுச் சிறந்தோங்கும்போது அது மேற்கூறிய புகழுரைகளுக்கெல்லாம் உரியதாய் விளங்கு மென்பதில் சந்தேகமில்லை.

## தேசீய ஆதாயம்

கதர் உற்பத்திச் செலவையும் ஆலைத் துணி உற்பத்திச் செலவையும் மேலே ஒப்பிட்டுப் பார்த்தோம். ஆனால் இவற்றைக்கொண்டுமட்டும் அவற்றின் மேன்மை தாழ்வை நிர்ணயித்து விடுதல் முற்றுந் தவறாக முடியும். அத்தொழில்களினால் மொத்தத்தில் தேசத்துக் கேற்படும் ஆதாயத்தையும் சிந்தித்துப் பார்க்கவேண்டும். ஒரு தொழிலினால் ஒரு வழியில் கிடைக்கும் லாபம் மற்றும் நூறு வழிகளில் தேசத்துக்கு நஷ்டமாகிக் கொண்டிருக்கலாம். அம்மனமாயின் தேசத்தின் மொத்த ஆதாயம் பெரி

றும் குறைந்துவிடுமெல்லவா? ஆலைத் தொழில் விஷயத்தில் இப்படித் தான் நிகழ்ந்து வருகிறது. அத்தொழிலினுல் பலவழியிலும் வெளி நாடுகளுக்குப் பணம் போய்க்கொண்டிருக்கிறது. இராட்டை, கைத் தறிகளைக்கொண்டு துணி உற்பத்தி செய்யும்பட்சத்தில் இந்தத் தேசிய நஷ்டம் ஏற்படாமல் தடுத்துவிடலாம். ஆலைத்தொழிலில் அநாவசியமான செலவினங்கள் எவ்வளவு ஆகின்றனவென்பதையும், அவற்றில் எவ்வளவு பகுதியை இராட்டைத் தொழிலினுல் தடுத்துவிடக் கூடுமென்பதையும் கீழே காண்க :—

| | இனம். | செலவு. | இராட்டையில் 100க்கு எவ்வளவு மீதமாகும் ? |
|---|---|---|---|
| 1. | ஆலை நூலுக்கும் துணிகளுக்கும் போக்குவரவு செலவுகள், இன்ஷியூரன்ஸ், தரகுக் கூலி | $3\frac{1}{2}$ கோடி ரூபாய் | 50% |
| 2. | 20 லட்சம் கட்டுப் பஞ்சை ஆலைகளுக்குக் கொண்டு போகும் செலவு, இன்ஷியூரன்ஸ், தரகு உள்பட | $4\frac{1}{2}$ கோடி ரூபாய் | 50% |
| 3. | இயந்திர சாமான்களும் கருவிகளும் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி | 50 லட்சம் ரூபாய் (1919 முதல் 22 வரை நாலு வருஷத்தின் சராசரி.) | 100% |
| 4. | எதிர் வரி (இப்போது ரத்து செய்யப்பட்டது) | 210 லட்சம் ரூபாய் | 100% |
| 5. | வருமான வரி, அதிக வருமான வரி | 50 லட்சம் ரூபாய் | 100% |
| 6. | ஸ்தல ஸ்தாபன வரிகள் | 12 லட்சம் ரூபாய் | 75% |
| 7. | நகர சபை வரிகளும், தண்ணீர்த்தீர்வையும் | 15 லட்சம் ரூபாய் | 100% |
| 8. | இயந்திரங்களின் பெறுமானக் குறைவு | 70 லட்சம் ரூபாய் | 100% |

மேற்கூறிய செலவினங்களில் 1, 2, 3, 5, 8 இனங்கள் உண்மையிலேயே தேசத்திற்குப் பெரும் நஷ்டமாகும். இவையன்றி வருஷந்தோறும் புதிய ஆலைகள் அமைப்பதற்காக ஏராளமான தொகை போய்ச்

கொண்டிருக்கிறது. இந்த இனத்தில் நான்கு வருஷங்களின் கணக்கு வருமாறு:—

| 1919-20 | 1920-21 | 1921-22 | 1922-23 |
|---|---|---|---|
| 2,78,53,260 | 6,45,05,810 | 12,06,33,056 | 67,08,030 |

இயந்திரக் கருவிகளுக்கும், அவற்றை அமைத்து ஓட்டும் தொழிலாளிகளுக்கும் நமது ஆலைகள் அன்னிய நாட்டையே நம்பியிருப்பதால் அவ்வப்போது அவற்றை அபிவிருத்தி செய்வதற்கும், புதுப்பிப்பதற்கும் ஏராளமான பணம் போடவேண்டி யிருக்கிறது. ஒரு விஷயத்தை முக்கியமாகக் கவனிக்கவேண்டும். இங்கிலாந்தில் ஓர் ஆலை ஏற்படுத்தி வேலை தொடங்குவதற்கு எவ்வளவு பணம் வேண்டுமோ அதைப்போல் சரியாக இரண்டு மடங்கு இந்தியாவில் வேண்டியிருக்கின்றது. இதன்றியும், ஆலைகள் வருங்காலத்தில் எவ்வளவுக்கு அபிவிருத்தியடைகின்றனவோ, அவ்வளவுக்கு நாம் நிரந்தரமாய் அயல்நாடுகளைச் சார்ந்து வாழ்வோராகி விடுவோம். எதிர் வரி இல்லாமற்போயினும், ஆலைத் துணிகளின்மூலம் தேசத்தார் ஒரு கோடி ரூபாய் வரி செலுத்தவேண்டி யிருக்கிறது. சாமான் போக்கு வரவு, இன்ஷியூரன்ஸ், தரகு முதலிய இனங்களில் ஏழு, எட்டு கோடி ரூபாய் இப்போது செலவாகிவருகிறது. இராட்டைத் தொழில் பரவினால் இதில் பெரும்பகுதி மீதமாகிவிடும். விளம்பரம் முதலிய வேறு பல செலவுகளும் இராட்டைத் தொழிலில் ஏற்படுவதற் கிடமில்லை. மொத்த தேசிய ஆதாயத்தை வேறொருவிதமாகவும் ஆராய்ச்சி செய்து பார்க்கலாம். ஆலைகளில் துணி உற்பத்திக்காகும் செலவை இனம் இனமாக ஆராய்ந்தால் அதில் எவ்வளவு பகுதி இராட்டையின்மூலம் மீதமாகும் என்பது தெரியவரும். ஆமதாபாத்திலுள்ள ஐந்து ஆலைகளுக்குச் செலவினங்கள் வருமாறு:—

| செலவினம். | குஜராத் நூல் ஆலை. | பாரத்கண்ட் பருத்தி ஆலை. | மணியூ சந்த் ஆலை. | புதிய பருத்தி ஆலை. | ராஜநகர் ஆலை. | சராசரி. |
|---|---|---|---|---|---|---|
| 1. கூலி | 15.9 | 17.6 | 16.5 | 14.8 | 21.2 | 17% |
| 2. சாமான் | 18.3 | 8.8 | 9.7 | 11.4 | 11.2 | 12% |
| 3. விறகு கரி | 3.6 | 4.1 | 3.4 | 3.1 | 3.6 | 3.5% |
| 4. வட்டி | 1.2 | 2.9 | 2.6 | 3.4 | —— | 2.5% |
| 5. கமிஷன் | 1.3 | 2.9 | 4.3 | 4.0 | —— | 2.5% |
| 6. வரி | 9.9 | 5.9 | 7.1 | 3.1 | 4.2 | 5.5% |
| 7. பருத்தி | 44.2 | 50.0 | 48.0 | 53.5 | 6.40 | 53% |
| 8. பெறுமானக் குறைவு | 5.1 | 2.9 | 2.3 | 2.8 | —— | 3% |

ஆலைகளில் துணி உற்பத்திக்காகும் செலவில் 100-க்கு 15 பங்கு விறகு, இன்ஷியூரன்ஸ், தரகு, வரி, பெறுமானக்குறைவு முதலிய இனங்களுக்கு ஆகின்றது. கைத்தொழிலினுல் துணி உற்பத்தி செய்வதில் நூற்றலுக்கும் நெசவுக்கும் அதிக கூலி கொடுக்கவேண்டி யிருந்தபோதிலும் மேற்கண்ட அனுவசியமான செலவுகள் எல்லாம் ஏற்படாதாதலின் அவை தேசிய ஆதாயமாகின்றன. இந்தவழியில் ஆராயும்போது ஆலைகளைக்காட்டிலும் கைராட்டையும் கைத்தறியுமே தேசத்துக்கு லாபகரமானவை என்பது தெள்ளிதின் விளங்கும்.

## போதுஜன நலம்

பொருளாதார ஆராய்ச்சி இத்துடன் நிற்க. கைத்தொழில்களின் உயர்வு தாழ்வுகளைப்பற்றிச் சிந்திக்குங்கால் கவனிக்கவேண்டிய மற்ருேர் அம்சம் பாக்கி யுண்டு. இது மேற்கூறியவை யெல்லாவற்றினும் முக்கியமுடையதாகும். குறிப்பிட்ட தொழிலினுல் பொதுவாக ஜன சமூகம் க்ஷேமமடைகின்றதா, ஜனங்களின் வாழ்க்கையில் சந்தோஷம் அதிகமாகின்றதா என்பதே அந்த முக்கியமான அம்சம். ஆலைகள் ஜன சமூகத்தில் மிகச் சிறு பகுதியாருக்கே வேலை கொடுக்க முடியுமென்று சொல்லவேண்டியதில்லை. தற்போது இந்தியாவிலுள்ள ஆலைகள் எல்லாவற்றிலும் வேலைசெய்யும் தொழிலாளரின் தொகை 4 லட்சம் பேருக்கு மேலில்லை. தரகர்கள், சில்லரைக் கடைக்காரர்கள் முதலிய எல்லாரையும் சேர்த்தாலும், ஆலைத் தொழிலினுல் பிழைப்பவர்கள் பத்து லட்சம் பேருக்குமேல் நிச்சயமாய் இருக்கமாட்டார்கள். கைத்தறியினுல் இப்போதுகூட எவ்வளவுபேர் பிழைக்கிருர்களென்பதையும், இராட்டை இயக்கம் பரவினுல் அது எவ்வளவுபேருக்கு ஜீவனோபாயமாகவும், துணைத் தொழிலாகவும் ஆகக்கூடு மென்பதையும் சிந்தித்துப் பார்த்தால் ஆலைகளினுல் பிழைப்போரின் தொகை எவ்வளவு சொற்பம் என்பது நன்கு விளங்கும். ஆலைகள் இப்போதுள்ளதைப்போல் இருமடங்கானுல்தான் என்ன பயன்? நாட்டிலுள்ள கோடானுகோடி ஏழைமக்களில் எத்தனைபேருக்கு அவற்றினுல் பிழைப்பு அளிக்க முடியும்? உண்மையில் ஆலைத்தொழில் எவ்வளவுக்கு விருத்தியாகின்றதோ, எவ்வளவுக்குப் புதிய உயர்தர இயந்திரங்களும் கருவிகளும் ஏற்படுகின்றனவோ அவ்வளவுக்கு ஜனங்களின் பிழைப்புக் கெடுமே யல்லாது வேறில்லை. பாரத நாட்டுக்குத் தற்போது வேண்டுவது என்ன? ஒரு சிலரின் கையில் ஏராளமான பணஞ் சேர்ந்தால் போதுமா? தொகை எவ்வளவு சொற்பமாயினும் அது கோடிக்கணக்கான ஜனங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப் படவேண்டியதே முக்கியமானது. வேலை யில்லாது தவிக்கும் ஏராளமான ஜனங்களுக்கு வேலை வேண்டும். தேசமெங்கும் பரவியுள்ள

ஏழைக் குடியானவர்களுக்கு அவர்களுடைய வாழ்க்கை நிலைமைக்கொத்த துணைத்தொழில் ஒன்று வேண்டும். இந்த நோக்கங்களை ஆலைகளின் மூலம் நிறைவேற்றி வைக்க முடியாது. எவ்வளவுதான் திறமையுடன் அவை வேலைசெய்தாலும், தாங்கள் உற்பத்தி செய்யும் செல்வத்தை நாட்டில் தர்ம நியாயமாகப் பகிர்ந்து கொடுக்க அவற்றினால் ஆகாது. துணி உற்பத்தித் தொழிலைத் தேசமெங்கும் பரப்பி லட்சக் கணக்கான ஏழைகளின் ஜீவாதாரமாகச் செய்வதற்குப் பதிலாக ஆலைகள் ஓரிடத்தில் ஏராளமாக உற்பத்தி செய்து ஒரு சிலருக்குப் பெரும் லாபம் தருவதோடு நின்றுவிடுகின்றன. இதற்குமாறாக இராட்டைத்தொழிலை உயிர்ப்பிப்பதால் விளையும் நன்மைகளைக் கவனிப்போம். இராட்டை பெருந்திரளான ஏழை மக்களைக் கொடிய வறுமையிலிருந்து காப்பாற்றும்; வேலை கிடைக்காத காரணத்தினால் சோம்பிக் காலங் கழிப்பவர்களுக்கு அது வேலை யளிக்கும்; எத்தனையோ நூற்றாண்டுகளாகத் தலைமுறை தலைமுறையாய் வந்த கைத்திறமை அழியாமல் பாதுகாத்து அதைப் பொருளுற்பத்திக்குப் பயன்படுத்தும்; கோடிக் கணக்கான ஜனங்கள் தங்கள் உடல் நலத்துக்காவது, சன்மார்க்க வாழ்வுக்காவது பாதகம் செய்யாத வேலை பெறுவார்கள். ஆலைகள் பெருத்த நகரங்களில் தொழிலாளர்கள் வசிக்கும் இடங்கள் எவ்வளவு பயங்கரமான நிலைமையிலிருக்கின்றன வென்பது அனைவரும் அறிந்ததே. இவ்விடங்களில் வசிப்போர் தங்கள் உடல் நலத்துக்கும், ஒழுக்க நெறிக்கும் கேடு விளையாமல் தப்புதல் மிகவும் அருமை. கிராமக் கைத்தொழிலாளிகள் இத்தகைய பயங்கரங்களை அறியவே மாட்டார்கள். ஆலைத் தொழிலாளிகள் இயந்திரங்களுக்கு அடிமைகளாய்த் தாங்களும் இயந்திரங்களைப் போலவே வேலை செய்ய வேண்டியவர்களா யிருக்கின்றனர். தொழிற்சாலையின் பயங்கரமான சத்தமும், உழைப்பும், பிற தொல்லைகளும் சேர்ந்து நாளடைவில் தொழிலாளியின் உடல் சக்தியை அடியோடு கெடுத்து அவனை நடைபிணமாகச் செய்துவிடுகின்றன. சமூக ஊழியத்தின்மூலம் ஆலைத் தொழிலாளிகளின் துன்பங்களை ஓரளவு போக்கலாமென்பது உண்மையே. நல்ல காற்றோட்டமுள்ள குடியிருப்பு வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்தும் மதுபானம் முதலிய தீயவழக்கங்களிலிருந்து விடுவித்தும் அவர்களுக்கு உதவிபுரியலாம். ஆனால் இத்துறையில் எவ்வளவுதான் செய்தாலும் ஆலை வேலையினால் அவர்கள் அடையும் கேடுகளை அறவே விலக்க முடியாது. கிராமத் தொழிலாளிகளின் வாசஸ்தலம் ஆலைத் தொழிலாளியின் இருப்பிடத்தைவிட எவ்வளவோ மேன்மை பொருந்தியதாகும். அவர்களுடைய தேக சுகமும் அவ்வாறே. கிராமத்திலுள்ள கைத்தொழிலாளி கூலி குறைவாகப் பெற்றாலும் அவன் திருப்தியுடன் வாழ்க்கை

நடத்த இயலுகின்றது. பாரதநாட்டின் வருங்கால மேன்மை நமது கிராமக் கைத்தொழிலாளிகளின் க்ஷேமத்தையே முழுதும் பொறுத்த தாகும். அவர்கள் இழந்துவிட்ட அற்புத சிருஷ்டி சக்தியைத் திரும்பப் பெறவேண்டும். கைத்தறி நெசவுகாரர்கள் தங்கள் ஆச்சரியமான கைத் திறமையை மீண்டும் காண்பிக்கவேண்டும். இத்தகைய நிலைமை ஏற்படு மென்று நம்பிக்கை கொள்ளப் பெரிதும் இடமிருக்கின்றது. கதர் இயக் கம் நிலைபெறுங்கால், நெசவுகாரன் சுதந்திரமாக வேலை செய்வான். தானே சொந்தமாக நூல் வாங்கித் துணி நெய்து விற்பனை செய்வான். அந்த நிலைமையில் அவன் தன் கைத்திறன் முழுவதும் காட்டி வித வித மான அற்புத ஆடைகளை உற்பத்தி செய்வான். வேலைக்கு எப்போதும் அவனுக்குக் குறைவு ஏற்படாது. உடலும் ஆன்மாவும் பிணிக்கப்பட் டிராமல் அவன் தலைநிமிர்ந்து நின்று நாட்டின் சிறந்த பிரஜையாக விளங்குவான். அவனால் தேசத்தின் ஆண்மை மீண்டும் நிலை நிறுத்தப் பெறும். இந்தப் புராதனக் கைத்தொழில் புதியதொரு பொருளாதார நோக்கத்துடனும் புதியதொரு நாகரிகத்தை அடிப்படையாகக் கொண்டும் உயிர்த்தெழுந்து செழிப்புற்றோங்கும். அப்போதுதான் பாரதநாடு இயந் திரங்களைப்போல் ஒரேவிதமாகச் சிந்தித்து ஒரேவிதமாகப் பொருள் உற் பத்தி செய்யும் நோயினின்றும் விமோசனம் பெற்று, முன்போல் மீண்டும் சௌந்தரிய நிலையமாய்த் திகழா நிற்கும்.

---

நான்காம் அத்தியாயம்

## அன்னியத் துணி பகிஷ்காரம்

தனி யொருவனுக்கோ, ஒரு சமூகத்துக்கோ தீமைபயப்ப தெதையும் புறக்கணித்து விடவேண்டுமென்பது இயற்கை நியதியாகும். இந்த இயற்கை நியதியை அடிப்படையாகக் கொண்டு தீமையை எதிர்த்து நிற்பதே உண்மையான பகிஷ்காரம். வெகு காலமாக, கொடுமைக்காளான ஜனங்கள் சுதந்திர வாழ்வு பெற முயலும்போதெல்லாம் இந்தத் தற்காப்பு ஆயுதத்தைக் கையாண்டு வந்திருக்கிறார்கள். பகிஷ்காரமென்பது அழிவு வேலை மட்டுமன்று; அது ஆக்க வேலையுமாகும். ஒரு தேசத்தார் வெளிநாட்டுச் சாமான்களை விலக்குவதென்னும் விரதங்கொள்ளும்போது தாங்கள் நிர்மாண வேலையில் ஈடுபட்டே தீரவேண்டியவர்க ளாகின்றனர். ஆங்கிலேயர் தங்களுக்குத் தேவையாயிருந்த காலத்தில் இவ்விலக்கு முறையையே மிகக் கடுமையாக அனுஷ்டித்து வந்தார்கள். பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் தொழிலபிவிருத்தியைப்பற்றி எழுதுங்கால் சரித்திராசிரியர் லெக்கி கூறுவதாவது:— "இங்கிலாந்தில் அரசாங்கத்தின் உதவி பெறாத தொழில் எதுவுமே நடந்தது கிடையாது. தடைச்சட்டங்களின் மூலமாகவேனும், நன்கொடை மூலமாகவேனும் எல்லாத் தொழில்களும் உதவிபெற்றே வந்திருக்கின்றன. ஆங்கிலத் தொழிற்சாலை முதலாளிகளின் சுயநலமும் குறுகிய நோக்கமுமே அமெரிக்காவுடன் விரோதம் ஏற்பட்டதற்குக் காரணம். அயர்லாந்தின் தொழில் முன்னேற்ற முயற்சியை ஆரம்பத்திலேயே அழித்துப் போட்டவர்கள் அவர்களே. இந்தியாவின் காலிகோ துணித்தொழிலை நசுக்கிக் கொன்றவர்களும் அவர்கள்தான். இங்கிலாந்தின் ஜனங்கள் தங்களுக்கு வேண்டிய சாமான் ஒவ்வொன்றையும் தனி உரிமைபெற்ற மேற்படி தொழிற்சாலை முதலாளிகள் குறிப்பிட்ட விலைக்கே வாங்கவேண்டியதா யிருந்தது." அமெரிக்காவின் சுதந்திர மகா யுத்தத்தின்போது அந்நாட்டார் ஏறக்குறைய இதே விதமான முறையைக் கையாண்டார்கள். இதைக் குறித்தும் சரித்திராசிரியர் லெக்கி மிகத் தெளிவாக விவரித்திருக்கிறார்:— "முக்கியமான பட்டணங்களைச் சேர்ந்த வியாபாரிகள் இனிமேல் இங்கிலாந்திலிருந்து எவ்வித சரக்கும் தருவிப்பதில்லை யென்றும், ஏற்கனவே கொடுத்திருந்த ஆர்டர்களையும் ரத்து செய்து விடுவதென்றும் உடன்படிக்கை செய்துகொண்டார்கள். ஸ்டாம்புச் சட்டம் ரத்துசெய்யப்படும் வரையில் பழைய கடன் பாக்கிகளையும் இங்கிலாந்துக்கு அனுப்புவதில்லை யென்று ஒருசிலர் தீர்மானித்தார்கள். இங்கிலாந்தின் உதவியை

எதற்கும் எதிர்பாராதிருக்கும்பொருட்டு உள்நாட்டில் கைத்தொழில் களை வளர்க்கப் பெருமுயற்சி செய்யப்பட்டது. பெருஞ் செல்வர்கள் எல்லாம் இங்கிலாந்திலிருந்து வந்த புதிய உடைகளைப் புறக்கணித்துப் பழைய உடைகளையும், கைநூலாலான உள்நாட்டு ஆடைகளையும் அணிவதில் முதன்மையாக நின்றார்கள். உள்நாட்டிலேயே போதிய கம்பளி உடை தயாரிப்பதற்கு வேண்டிய ஆட்டு ரோமம் கிடைக்கும் பொருட்டுக் கொஞ்சகாலத்திற்கு ஆட்டு மாமிசம் யாரும் சாப்பிடுவதில்லை யென்று கட்டுப்பாடு செய்துகொண்டார்கள்.'' இவ்வாறு இங்கிலாந்தும், அமெரிக்காவும் தங்களுக்குத் தேவை நேர்ந்த சமயங்களில் பகிஷ்கார முறையைக் கையாண்டன. ஆனால் அவை சுதந்திர இராஜ்யங்களாயிருந்தபடியால் அந்நாட்டார் தத்தம் அரசாங்கங்களை உடனுக்குடன் வேண்டிய நடவடிக்கைகள் நடத்தும்படி தூண்டுதல் சாத்தியமாயிருந்தது. ஆனால் அத்தகைய அதிர்ஷ்டம் இன்று இந்தியாவுக்கு இல்லை. இங்கும் ஜனங்களின் சொந்த அரசாங்கம் இருக்குமாயின், நாட்டிற்குத் தேவையான பொருள்களுக்குப் பிறதேசங்களை நம்பியிராவண்ணம் உள்நாட்டுத் தொழில்களுக்கு ஆதரவு அளித்திருக்கும். அரசாங்கம் செய்யத் துணியாத அக்காரியத்தை நாட்டுமக்களே இப்போது செய்தாகவேண்டும். இது காறும் நாம் நமது சொந்த நாட்டுக் கைத்தொழில்களையே பகிஷ்கரித்து வந்திருக்கிறோம். ஆனால் இதை நாம் மனமறிந்து வேண்டுமென்று செய்யவில்லை. எனினும் இந்த சுதேசி பகிஷ்காரத்தை நாம் நீக்கி, நமது தொழிலாளிகளின் அற்புதக் கைத்திறமைக்குப் புத்துயிர் அளிக்கவேண்டுமானால், அன்னியத் துணியை அடியோடு விலக்குதல் இன்றியமையாது உடனே செய்யவேண்டிய வேலையாகும். வாழ்வுக்கு முதன்மையாக வேண்டிய பொருள்களில் துணி ஒன்று. அத்தகைய துணிக்கு அன்னியர்களை நம்பி யிருக்கும் ஒரு நாட்டார் வேறு துறைகளில் முன்னேறுதல் துர்லபம். பகிஷ்கார முறையை ஜனங்கள் பூரணமாய் அனுஷ்டிக்க முன்வந்தாலன்றி வேறெவ்வகை முயற்சியும் சாத்தியமாகாது. தொழில் துறையில் இந்தியா புனருத்தாரணம் அடைதல் தொழிலாளிகளின் கைத்திறனைமட்டும் பொறுத்த விஷயமன்று; அது முதன்மையாக ஜனங்களின் மனோபாவத்தைப் பொறுத்தது. இயந்திரங்களிலும் தொழில் முறைகளிலும் கவனம் செலுத்துவதினால்மட்டும் அது சாத்தியமாகாது; ஒவ்வோர் ஆண், பெண், குழந்தையின் உள்ளமும் முதலில் மாறுதலடையவேண்டும். அன்னிய நாட்டுத் தொழிலாதிக்கத்திலிருந்து விடுதலை பெறவேண்டு மென்னும் உறுதியும், நமது கைத்தொழில்களை உயிர்ப்பிக்க வேண்டுமென்னும் விருப்பமுமே நமது பிரதான ஆயுதங்களாகும்.

## துணி இறக்குமதி

ஆகவே இந்தியாவிலும் பகிஷ்கார இயக்கமானது தடைமுறை, ஆக்கமுறை என்னும் இரு அம்சங்களும் பொருந்தியதாயிருக்கவேண்டும். பிரசாரமும், கூடியவரையில் துணித் தேவைகளைக் குறைத்துக் கொள்ளுதலும் இவ்வியக்கத்தின் வெற்றிக்கு ஓரளவு துணை செய்யும். ஆனால் வெற்றிக்கு நிச்சயமான வழி, தற்போது அயல்நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் துணி முழுவதையும் இங்கேயே உற்பத்தி செய்து அதை ஜனங்கள் வாங்கும்படி செய்தலேயாகும். இவ்வாறு உற்பத்தியைப் பெருக்குவதற்கு இரண்டு சாதனங்கள் நம் வசமிருக்கின்றன. ஆனால் அவற்றில் ஏதேனும் ஒன்றைத்தான் நாம் திறம்படக் கையாளக்கூடும். இயந்திரக் கதிரும், இயந்திரத் தறியும் ஒருசாதனம்; கைராட்டையும் கைத்தறியும் மற்றொரு சாதனம். இவற்றுள் எது சிறந்தது? எந்த சாதனம் நம்மை விரைவில் இலட்சியத்தினிடம் கொண்டு சேர்க்கும்? இதைப்பற்றி முடிவு செய்யவேண்டுமானால், எந்தத் துறையில் துரிதமான முன்னேற்றத்துக்கு இடமிருக்கிறதென்று நாம் ஆராய்ச்சி செய்யவேண்டும். தற்போது இறக்குமதி நிலைமை எப்படி யிருக்கிற தென்பதை முதலில் கவனித்துக்கொள்ளுதலும் அவசியம். நூலைப்பற்றியவரையில் இறக்குமதி மிகவும் குறைவேயாகும். மொத்தம் இந்தியாவில் செலவாகும் நூலில் 100க்கு 8 வீதம் தான் வெளி நாட்டிலிருந்து இறக்குமதியாகிறது. பின்வரும் புள்ளி விவரங்களினால் இதை நன்கறியலாம்:—

| | 1913-15 சராசரி. | 1916-18 சராசரி. | 1919-21 சராசரி. | 1922. | 1923. |
|---|---|---|---|---|---|
| 1. இந்தியாவில் மொத்தம் செலவான நூல் (லட்சம் ராத்தல்). | 5410 | 5070 | 5700 | 6690 | 7070 |
| 2. இறக்குமதியான நூல் (லட்சம் ராத்தல்). | 450 | 290 | 320 | 570 | 580 |
| 3. 100ல் எவ்வளவு பங்கு? | 8% | 5% | $5\frac{1}{2}$% | 8% | 8% |

இதிலிருந்து நூல் இறக்குமதி யுத்தத்திற்கு முன்னிருந்த நிலைமையிலேயே இன்னும் இருந்து வருவதாக ஏற்படுகிறது. இப்பொழுது துணி இறக்குமதி நிலைமையைக் கவனிப்போம்:—

| | 1913-15 சராசரி. | 1916-18 சராசரி. | 1919-21 சராசரி. | 1922. | 1923. |
|---|---|---|---|---|---|
| 1. இந்தியாவில் மொத்தம் செலவான துணி (கோடி கஜம்). | 491 | 388 | 326 | 353 | 419 |
| 2. இறக்குமதி (கோடி கஜம்). | 285 | 184 | 121 | 108 | 157 |
| 3. 100ல் எவ்வளவு பங்கு ? | 57½% | 47% | 37½% | 30% | 37% |
| 4. இறக்குமதியின் பெறுமானம் (கோடி ரூபாய்). | 50 | 41 | 56 | 60 | 59 |

துணி இறக்குமதி அளவில் பெரிதும் குறைந்துவிட்டதென்பது தெளிவாகிறது. மொத்தம் இந்தியாவில் செலவாகும் துணியில் 100க்கு 37 வீதந்தான் தற்போது அயல்நாட்டிலிருந்து வருகிறது. ஆனால் இறக்குமதியின் பெறுமானம் மட்டும் குறையவில்லை. துணிக்காக வெளிநாட்டுக்குப் போகும் பணம் முன்னைவிட அதிகமாகவே யிருந்து வருகிறது. இதிலிருந்து இறக்குமதி அளவில் குறைந்திருப்பதின் காரணங்களை நாம் ஒருவாறு ஊகித்தறியலாம். சுருங்கக்கூறின், அக் காரணங்கள் பின்வருவனவாகும்:— தேசத்தில் நடந்துவரும் பகிஷ்காரப் பிரசாரம்; பொதுவாக சுதேசி சாமான்களையும் சிறப்பாகக் கதர்த் துணியையும் ஜனங்கள் ஆதரித்தல்; தேசத்தில் துணி உபயோகம் மொத்தத்தில் குறைந்திருத்தல்; நாணய மாற்று விகிதங்களில் ஏற்றத்தாழ்வு; அன்னியத் துணிகளின் விலை ஏற்றம். இவற்றில் ஒவ்வொன்றும் துணி இறக்குமதி அளவில் குறைவதற்கு முக்கிய காரணமா யிருந்துவருகின்றன. இதுவரை நடந்திருக்கும் பகிஷ்காரப் பிரசாரத்தின்பயனாக இனி மேல் இறக்குமதி யுத்தத்திற்கு முன்னிருந்த அளவுக்குப் போகாது என்று நிச்சயமாகக் கூறலாம். ஆனால் அன்னியத் துணியை அடியோடு விலக்குவது எப்படிக் கைகூடும்? தற்போது 150 கோடி கஜம் துணியும் 5 கோடி ராத்தல் நூலும் வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகி வருகின்றன. இவ்வளவு துணியும் நூலும் இங்கேயே உற்பத்தியாகுமாறு ஏற்கனவேயுள்ள சாதனங்களைத் துரிதமாக அபிவிருத்தி செய்யவேண்டும்; அல்லது புதிய சாதனங்களை ஏற்படுத்தவேண்டும்.

## ஆட்சேபங்கள்

இந்த சாதனங்களைக் குறித்து ஆராய்வதற்கு முன்னால், பகிஷ்கார முறையையே எதிர்த்துக் கூறப்படும் ஆட்சேபங்களைப் பற்றிச்

சிறிது கவனித்து மேலே செல்வோம். பகிஷ்கார முறையினால் தேசத் திற்குத்தான் தீமையுண்டாகுமென்றும், அது இங்கிலாந்தையும் பாதி யாது, சுதேசித் தொழில்களையும் வளர்க்காது என்றும் சிலர் சொல்லு கிறார்கள். மகாயுத்தத்தின்போது 800 கோடி பவுன் கடன்பட்ட ஆங்கிலநாடு வருஷம் 4 கோடி பவுன் நஷ்டத்தைப் பொருட்படுத்தாது என்று ஸ்ரீமான் காலே சொல்கிறார். இது பொருளில்லாத வாதம். அன்னியத்துணி பகிஷ்காரத்தை இந்தியா வெற்றிபெற நடத்திவைத் தால் அதன்மூலம் இங்கிலாந்துக்கு வியாபாரத்துறையில் ஏற்படும் நஷ் டம் நினைக்குறச் செய்வதாயிருக்கும். இங்கிலாந்தின் ஜீவாதாரமான தொழில் படுத்துவிட்டால், அதன்பயனாக எல்லாத் தொழில் துறை களுமே பாதகமடையும். பாங்கித் தொழில், கப்பல் போக்கு வரவு, துறைமுகங்கள் எல்லாம் கலகலத்துவிடும். இந்தியாவில் பகிஷ்காரம் வெற்றிபெற்றால் பிரிட்டனுக்கு 8 கோடி பவுனுக்குமேல் நஷ்ட மேற்படு மென்று லார்டு பெண்ட்லண்டு முதலியவர்கள் மதிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் சில கோடி பவுன் நஷ்டமாவது பெரிய காரியமன்று ; பருத்தித் துணிக்கு உலகிலேயே பெரியதான சந்தையை இழந்து விடுவதுதான் பெரிய நஷ்டம். பிரிட்டன் மனப்பூர்வமாக அதை இழக்க ஒருநாளும் ஒருப்படாது. பகிஷ்காரத்தினால் சுதேசித்தொழில் அபிவிருத்தி அதிக மேற்படாது என்று ஸ்ரீமான் காலே சொல்வதும் ஆதாரமற்றது. வெளி யிலிருந்து வரும் ஒரு பொருளை விலக்கும் முறை கையாளப்படும் போது, அதனாலேயே நாட்டில் அந்தப் பொருள் உற்பத்திக்குரிய சாத னங்களை யெல்லாம் பயன்படுத்தி உற்பத்தி செய்தல் அவசியமாகிறது. நாட்டில் அப்பொருள் உற்பத்தி செய்யவே முடியாதென்று கூறும் பட் சத்தில், அது பகிஷ்காரத்துக்கு உண்மையில் விரோதமான ஓர் ஆட் சேப மாகலாம். மிஸ்டர் கூபுரோ என்பவர் இந்த ஆட்சேபத்தைக் கிளத்தியிருக்கிறார். இறக்குமதியாகும் துணிவகைகளில் 100 க்கு 75 பங்கு நாட்டில் உற்பத்தி செய்யமுடியாதவைகளென்றும், ஆதலின் பகிஷ்காரம் காரியாம்சத்தில் நடக்கக்கூடிய திட்டமன்றென்றும் அவர் சொல்கிறார். * ஆனால் இந்த ஆட்சேபத்துக்கு எளிதில் பதில் சொல்லி

---

* பகிஷ்கார இயக்கம், ஆலை முதலாளிகள் கொள்ளை லாபம் அடிப் பதற்குச் சாதகமாயிருக்குமென்றும் மிஸ்டர் கூபுரோ வாதம் செய்கிறார். ஆலை முதலாளிகள் அவ்வளவு பேராசை பிடித்தவர்களாய், பகிஷ்கார இயக்கத்துக்கு உதவிசெய்ய மறுப்பார்களென்று நம்புவதற்கில்லை. அவர்களுக்கும் நாட்டின் நலத்தில் சிரத்தை உண்டு. மேலும் தங்கள் சொந்தத்தொழிலின் நன்மையை முன்னிட்டும் அவர்கள் அவ்வாறு செய்யமாட்டார்கள். தற்போதைய லாபத்துக்குமட்டும் ஆசைப்பட்டு,

விடலாம். பகிஷ்காரம் தீவிரமாக நடைபெறும்போது, உடை விஷயத்தில் ஜனங்களின் மனோபாவமும் மாறுதலடைந்தே தீரும். அப்போது மேற்கூறிய கஷ்டம் விளைய இடமில்லை. ஜனங்கள் பகிஷ்காரத்தில் உறுதிபெறுங்காலத்தில், 'போட்டியிட முடியாதவை' களும் போட்டிக்குரியனவாகிவிடும். லங்காஷயர் துணிகளும், இந்திய ஆலைகள்-கைத்தறிகள் உற்பத்தி செய்யும் துணிகளும் வெவ்வேறானவை என்பது உண்மையே. ஆனால் இதிலிருந்து, லங்காஷயர் துணிபோன்ற துணி இந்தியாவில் உற்பத்தியானாலன்றி அதை விலக்கமுடியா தென்று ஏற்படாது. அங்ஙனமாயின், ஆலைகளும் கதர் ஸ்தாபனங்களும் சேர்ந்து எவ்வளவுதான் முயற்சி செய்த போதிலும் பயனில்லை. அன்னியத் துணி மிக மெல்லிய நூலால் அதிநயமாக நெய்யப்பட்டதா யிருக்கலாம். எனினும் இந்தியன் ஒருவன் அதைப்புறக்கணித்து பத்தாம் நம்பர் நூலினாலான கதர்த்துணியை உடுத்திக்கொண்டால், பின்னது முன்னதுடன் போட்டியிட்டு வென்றதே யாகுமன்றோ? உள்நாட்டில் செய்யமுடியாத அன்னியத்துணிகளுக்கெல்லாம் போட்டி கிடையாதென்பதாக மிஸ்டர் கூபுரோ வைத்துக்கொண்டு, அதன்மேல், பகிஷ்காரத்தின்பயனாக அந்தத் துணிகளின் விலைமலியுமென்றும், அதன் விளைவாக தேசத்தில் அத்துணிகள் அதிகமாகச் செலவழியுமென்றும் எச்சரிக்கை செய்கிறார். ஆனால் அவர் வாதத்தின் அஸ்திவாரமே தவறானது. உள்நாட்டில் செய்யக்கூடியவையாயினும், செய்ய முடியாதவையாயினும் அன்னியத்துணி எல்லாவற்றையும் அடியோடு விலக்கி, உள்நாட்டில் உற்பத்தியாகும் துணிகள் எவ்வகையாயிருப்பினும் அவற்றை ஆதரிப்பதே பகிஷ்காரத்தின் நோக்கமாகும்.

## ஆலையா? இராட்டையா?

பகிஷ்காரத்தை நிறைவேற்றுவதற்கு ஆலைகளைச் சாதனமாய்க் கொள்ளலாமா என்பதைக்குறித்து அடுத்தாற்போல் நாம் ஆராயவேண்டும். ஆலைகளில் துணி உற்பத்தியைப் பெருக்குவதின்மூலம் அன்னியத்துணி பகிஷ்காரத்தைத் திறம்பட நடத்திவிடலாமென்று பலர் பல முறையிலும் வாதித்திருக்கிறார்கள். ஆனால் ஆலை உற்பத்தியைப் பெருக்குதல் எவ்வளவு தூரம் சாத்திய மென்பதை நாம் முன்னமே கவனித்திருக்கிறோம். சமீபகாலத்தில், அதாவது குறைந்தது பத்து

நிரந்தரமான தொழில் வளர்ச்சிக்குரிய சந்தர்ப்பத்தை அவர்கள் கைவிட மாட்டார்கள். மேலும், பகிஷ்காரத்தின்பயனாகக் கதர்த்துணி உற்பத்தி வருஷாவருஷம் பெருகிவருமாதலின், ஆலைத்துணி விலை அளவுக்கு மிஞ்சிப் போய்விடாம லிருப்பதற்கு அதுவே தக்க தடையாயிருக்கும்.

வருஷத்தில், தேசத்திற்குவேண்டிய துணி முழுவதையும் தருமளவுக்கு ஆலைகள் பெருகுதல் அசாத்தியமென்று இங்கு வலியுறுத்துவதே போதும். ஆனால் ஆலைகளும் பகிஷ்காரத்துக்குப் பெரிதும் உதவி செய்யும் என்பதில் சந்தேகமில்லை. அவை உதவிசெய்தல் அவசியமுமாகும். 1913-ம் வருஷத்தில் ஆலைகளில் துணி உற்பத்தி 110 கோடி கஜமாயிருக்க, 1923-ல் உற்பத்தி 179 கோடிக்கு வந்துவிட்டது. அதாவது பத்து வருஷத்தில் 100க்கு 50 வீதம் ஆலை உற்பத்தி அதிகமாகியிருக்கிறது. அவை இவ்வாறே உற்பத்தியைப் பெருக்கிக்கொண்டு போகலாம். அல்லது இப்போதிருக்கும் அளவுக்கு உற்பத்தி குறையாமலாவது பார்த்துக்கொள்ளலாம். இத்துடன்கூட, பகிஷ்காரம் நடைபெறுங்காலத்தில் விலைகளை உயர்த்தாதிருப்பதின் மூலமாயும் ஆலைகள் பெரிதும் உதவிசெய்யக்கூடும். ஆலை முதலாளிகள் தங்கள் சொந்த லாபத்தைமட்டுங்கருதாமல், தேசப் பொது நன்மையை உத்தேசித்து, துணிகளின் விலையை உயர்த்தாமலிருந்தாலே தங்கள் கடமையைச் செலுத்தியவர்களாவார்கள்.

ஆகவே நாம் பெரிதும் கோரும் அன்னியத் துணி பகிஷ்காரத்தை ஆலைகளின் உதவியினால் மட்டும் பூரணமாய் நிறைவேற்ற முடியாதென்றால், வேறொரு சாதனத்தைக் கண்டுபிடித்தே யாகவேண்டும். இராட்டையையும் கைத்தறியையு * மன்றி அத்தகைய சாதனம் வேறொன்றும் கிடையாது. இராட்டைத் தொழிலின் வளர்ச்சி எவ்வளவுதூரம் சாத்தியமென்பதுபற்றிப் பொதுவாக முன்னமே கவனித்திருக்கிறோம். அன்னியத் துணி பகிஷ்காரத்தை வெற்றிபெற நடத்திவைப்பதற்குச் சாதனமாக இராட்டைத் தொழிலை அபிவிருத்தி செய்வது குறித்து இப்போது சற்றுவிரிவாக ஆராய்ச்சி செய்தல் வேண்டும். தற்போது வெளிநாட்டிலிருந்து ஏறக்குறைய 150 கோடி கஜம் துணியும் 6 கோடி ராத்தல் நூலும் இறக்குமதி யாகின்றன. 6 கோடி ராத்தல் நூலைத் துணியாக்கி

---

* தேசத்திற்கு வேண்டிய ஆடைகளில் ஒரு பகுதியை ஏற்கனவே கைத்தறிகள் உற்பத்திசெய்து வருகின்றன. ஆனால் அநேகமாக அவையெல்லாம் அன்னிய நூல் அல்லது ஆலை நூலே செய்கின்றன. 1915-ம் ஆண்டிலிருந்து கைத்தறிகளில் துணி உற்பத்தி அதிகமாகிக்கொண்டே வருவது குறிப்பிடத்தக்க ஓர் அம்சமாகும்.

| | 1916-18 சராசரி. | 1919-21 சராசரி. | 1922 | 1923 |
|---|---|---|---|---|
| கைத்தறிகளில் துணி உற்பத்தி (லட்சம் கஜம்). | 7230 | 7230 | 9440 | 11030 |

ஞல் 30 கோடி கஜம் ஆகலாம். இறக்குமதி யாகும் நூல் பெரிதும் மெல்லிய நூலாதலின், சராசரியில் ஒரு ராத்தல் நூலுக்கு 5 கஜம் துணி யென்று கணக்கிடப்படுகிறது. இந்த 180 கோடி கஜம் துணியையும் உள்நாட்டில் உற்பத்தி செய்வதற்கு, ஒரு கைத்தறி வருஷத்தில் சராசரி 1200 கஜம் துணி நெய்வதாக வைத்துக்கொண்டோமாயின், 15 லட்சம் கைத்தறிகள் வேலை செய்யவேண்டும். இவ்வளவு துணிக்கு வேண்டிய நூல் உற்பத்தி செய்வதற்குச் சுமார் ஒரு கோடி இராட்டைகள் சுழல வேண்டும். ஏற்கனவே நாட்டில் ஏராளமான கைத்தறிகளும், இராட்டைகளும் இருந்துவருகின்றன. இவைகளைக்கொண்டு வேலை தொடங்கிஞல் மேற்கூறிய நிலைமையை விரைவிலேயே உண்டுபண்ணி விடக்கூடும். ஆஞல் நமது நோக்கம் நிறைவேறும்வண்ணம் அந்த இராட்டைகளும், கைத்தறிகளையும் கொண்டு எவ்வாறு வேலை நடத்துவது என்பதே இப்போது கேள்வி. நமது கிராமங்களில் பொருளுற்பத்தி செய்வதற்குரிய சக்தி ஏராளமாக வீணே கிடந்துவருகிறது. இந்த சக்தியை முழுதும் பயன்படுத்தித் தக்க பயன் பெறுவதற்கு ஒரு வேலைத் திட்டம் தயாரித்து அதை இடைவிடா முயற்சியுடன் நடத்திவைத்தல் வேண்டும்.

## கதர் விற்பனை

பகிஷ்கார இயக்கம் நடந்துவரும் வரையில் தேசமக்கள் அனைவரும் கூடியவரையில் குறைவாக உடை யணிந்துவந்தால் தேசிய இலட்சியம் நிறைவேறுவதற்கு மிகவும் அநுகூலமாயிருக்கும். விலையுயர்ந்த சுகபோக உடைகளை அணியக்கூடிய செல்வர்கள் அவைகளைப் புறக்கணித்து தேசாபிமானத்துடன் சாதாரண நாட்டுத் துணிகளையே அணிய முன் வருவார்களாயின், இயக்கத்துக்குப் பேருதவி செய்தவர்களாவார்கள். பெருஞ் செல்வர்களிடையிலும், மத்திய வகுப்புப் பணக்காரர்களிடையிலும் தேசிய நாகரிகத்தில் அபிமானங்குன்றி, பரதேச நாகரிகத்தில் மோகம் வளர்ந்துவருகிறது. இத்திமையை உடனே நிறுத்தியாக வேண்டும். இத்துறையில் கதரியக்கத்திஞல் இதற்குள்ளாகவே சிறிதளவு பயன் விளைந்திருக்கிறது. ஊதாரிச் செலவைக் குறைத்து வாழ்வை எளிமைப்படுத்த வேண்டுமென்னும் எண்ணம் ஓரளவு உண்டாகியிருக்கிறது. நமது தேசநிலைக் கொவ்வாத சுகபோகங்களை யொழித்து எளிய வாழ்வை மேற்கொள்ள வேண்டு மென்னும் பிரசாரம் எவ்வளவுக்குப் பயன் தருகிறதோ அவ்வளவுக்குக் கதரியக்கத்தின் அபிவிருத்தி சுலபமாகும். இது ஒருபுற மிருக்க, உள்நாட்டிலேயே உற்பத்தியாகும் மற்றத் துணிகளையும்விடக் கதரையே சிரேஷ்டமாக்க் கருதி உடுத்த வேண்டுமென்று மற்ருெருபுறத்தில் பெரும் பிரசாரம் நடத்தவேண்டும். கோடிக்கணக்கான ஜனங்களிடையே கதராபிமானத்தை வளர்த்தாக

வேண்டும். அவர்கள் அன்னியத் துணியை அடியோடு விலக்குமாறும் செய்தல் வேண்டும். இந்நோக்கம் நிறைவேறுவதற்கு இடைவிடாமல் பெருங்கிளர்ச்சி நடத்தி வருதல் அவசியம். சிறிது காலத்திற்கு, கதரணிவோர் ஒவ்வொருவரும் கதர்ப் பிரசாரகராயிருந்து வரவேண்டும். அவர்கள் எல்லாருடைய தொண்டும் தேசத்திற்குத் தேவை. உடையணியும் விஷயத்தில் தேசத்தாரின் மனப்பான்மையை அடியோடு மாற்றிவிட வேண்டுமென்பது நமது நோக்கமாகும். கோடிக்கணக்கான ஜனங்களைக் கொடிய வறுமைத் துன்பத்திலிருந்து மீட்கவேண்டுமானல், மெல்லிய ஆடைகளில் மோகமும், விலை சரசத்தையே பெரிதாகக் கருதும் மனப்பான்மையும் போகவேண்டும். தேசியப் பெரு நலத்தை முன்னிட்டு இந்த மாறுதல் நிகழ்ந்தாகவேண்டும். கதர் உற்பத்தி தேவைக்குமேல் அதிகமானல் இயக்கத்துக்குத் தீங்கு விளையுமென்றும், அவ்வாறுகும்படி விடக்கூடாதென்றும் சிலர் சொல்லி வருகிறார்கள். உண்மையில் இத்தகைய அபாயத்துக்கு இடமே கிடையாது. தேச முழுவதிலும் கதருக்குத் தேவையிருந்துவருகிறது. இதைப் பயன்படுத்திக்கொள்வதில் தக்க கவனம் செலுத்தினுல், கதர் உற்பத்தி தேவையைவிட அதிகமாகி அதனுல் இயக்கத்துக்குத் தீங்கு விளையுமென்னும் பயத்துக்கு இடமேயில்லை. உயர் வகுப்பையும், மத்திய வகுப்பையும் சேர்ந்த ஜனங்களெல்லாரும் கதர் வாங்கக்கூடியவர்களென்று தற்போதைக்கு நாம் கொள்ளலாம். இவர்களெல்லாருக்கும் வேண்டிய கதர் கொடுப்பதற்கு முயற்சி செய்யவேண்டும். தற்போது பலவிடங்களில் கதர் விரும்பும் தேசாபிமானிகளுக்கு அது கிடைக்க வழியில்லாம லிருக்கிறது. பெரிய நகரங்கள், சிறு பட்டணங்கள் எல்லாவற்றிலும் கதர்க் கடைகள் திறக்கவேண்டும். பட்டணங்களில் ஜனங்கள் கஷ்டமில்லாமல் கதர் வாங்குவதற்குச் சாதனமாக, கூட்டுறவு முறையில் கதர்ச் சீட்டுகள் ஏற்படுத்தலாம். இருபது அல்லது முப்பது பேர் ஒன்றுசேர்ந்து தலைக்கு மாதம் மூன்று அல்லது நாலு ரூபாய் சீட்டுக் கட்டிவந்தால் மாதந்தோறும் மூன்றுபேர் வருஷ முழுவதற்கும் வேண்டிய கதர் பெற்றுக் கொள்ளலாம். ஒரே தடவையில் பணங்கொடாமல் பன்னிரண்டு மாதத்தில் கிரவிக் கொடுத்தல் சுலபமாயிருக்கும். ஏழைகளுக்கும், மத்திய வகுப்பினருக்கும், பொதுவாக மாணுக்கர்களுக்கும் இந்த முறையினுல் விசேஷ அநுகூலமுண்டு. இவ்வாறு கூட்டுறவு முறையில் கதர் வாங்குவோருக்கு விலை சிறிது தள்ளிக்கொடுத்தும் உதவி செய்யலாம். ஆனுல் ஜனங்கள் மாதச் சம்பளம் வாங்கும் பட்டணங்களிலேயே இந்த முறை சாத்தியமாகும். கிராமங்களில் மகசூல் காலங்களில்தான் ஜனங்கள் பணம் பெறுவார்கள். அந்தக் காலங்களில்தான் அவர்கள் சாமான் வாங்கவும் முடியும். கிராமாந்தரங்களில் கதர்க்கடைகள் ஏற்படுத்துவது இப்போதைக்கு இயலாத காரிய

மாதலால், தெருவிற்பனைத் தொண்டர்கள்மூலம் கிராமவாசிகளுக்குக் கதர் கொடுக்க முயற்சி செய்யவேண்டும். இத்தொண்டர்களுக்குக் கமிஷன் அல்லது உதவித் தொகை கொடுத்து ஆதரவு அளிக்கலாம். பெரிய உற்சவங்கள் நடக்குமிடங்களிலும், மற்றும் ஜனங்கள் அதிகமாய்ச் சேரக் கூடிய இடங்களிலும் அவ்வப்போது தாற்காலிகமாகக் கடைகள் ஏற்படுத்துதல் கதர் விற்பனையைப் பெருக்க ஒரு நல்ல வழியாகும்.

## நூற்போர் கடமை

கதரணியுங் கடமை, பட்டண வாசிகளான செல்வர்களுக்கும், மத்திய வகுப்பாருக்கும் மட்டும் ஏற்பட்டதன்று. கதர் உற்பத்தி செய்யத் துணை புரியும் நூற்போர், நெசவுகாரர் இவர்களுக்கும் அக்கடமை உண்டு. அவர்கள் எவ்வளவு ஏழையாயிருப்பினும் தாங்களும் கூடியவரை கதரணிந்து இயக்கம் பரவுதற்கு உதவி செய்யவேண்டும்.

## ஸ்தல ஸ்தாபனங்களின் உதவி

விற்பனை நிச்சயம் என்றிருக்கும்பட்சத்தில் கதர் அபிவிருத்திக்கு அதுவே பெரிய உதவியாகும். இராஜாங்கத்தாருக்கு விருப்பமிருந்தால், தங்களுடைய தேவைகளுக்கெல்லாம் கதரே வாங்குவதாக உறுதிகூறி அதன்மூலம் இயக்கத்துக்குப் பேராதரவு அளிக்கலாம். ஏனெனில் அப்போது உற்பத்தியாகும் கதரில் ஒரு பகுதியேனும் நிச்சயமாகச் செலவழியும் என்ற உறுதி ஏற்படுகிறது. இது ஒருபுறமிருக்க, நகர சபைகள், தாலூகா, ஜில்லா போர்டுகள் முதலிய ஸ்தல ஸ்தாபனங்கள் தங்களுடைய வைத்தியசாலைகள், பள்ளிக்கூடங்கள் ஆதியவற்றின் உபயோகத்திற்குக் கதர் வாங்கத் தீர்மானித்து உற்பத்தியில் ஒருபகுதிக்குச் செலவு ஏற்படுத்திக்கொடுக்கலாம்.* இது வெறும் கதர் விற்பனையாக மட்டும் ஆகாது. எவ்விதப் பணச் செலவுமின்றி நடத்தப்படும் சிறந்த பிரசாரமாகவும் இருக்கும்.

## உற்பத்தியைப் பெருக்குவ தெப்படி ?

கதர் உற்பத்தியைப் பெருக்குவதில், ஏற்கனவே மத்திய ஸ்தாபனங்களை அதிகமாய் எதிர்பாராமல் கதர் வேலை நடந்துவரும் பிரதேசங்களிலேயே பூரண கவனம் செலுத்தவேண்டும். நூற்பவர்கள் சொந்தப்

---

* ஸ்தல ஸ்தாபனங்கள் பல ஏற்கனவே தங்கள் பள்ளிக்கூடங்களில் இராட்டையிலும் கைக்கதிரிலும் நூற்பதற்கு ஏற்பாடு செய்திருக்கின்றன. வேறு சில ஸ்தாபனங்கள் தங்கள் ஊழியர்களுக்குக் கதருடை வாங்கிக் கொடுத்திருக்கின்றன.

பருத்தியைக் கொண்டு நூற்று நூலை விலைக்கு விற்கும் இடங்களில் அவர்களுக்கு இடைவிடாமல் தொழில் இருந்துவருமாறு வேண்டிய வசதியளிக்க வேண்டும். உற்பத்தியைப் பெருக்குவதற்கு நூல் சந்தைகள் ஏற்படுத்துவதுபோல் சிறந்த சாதனம் வேறு கிடையாது. நூற்பவர்கள் பஞ்சு சேகரித்து வைத்துக்கொள்ள முடியாவண்ணம் அவ்வளவு ஏழைகளாயுள்ள இடங்கள் உண்டு. இவ்விடங்களில் சரியான காலத்தில் பஞ்சு வாங்கிச் சேகரித்து வைக்க வேண்டிய தவசியம். ஆனால் இத்தகைய பிரதேசங்களிலும்கூடக் கூடியவரை நூற்பவர்கள் தாங்களே பஞ்சு சேர்த்து வைத்துக்கொள்ளுமாறு தீவிரமான பிரசாரம் செய்யவேண்டும். ஜனங்கள் பருத்தியை ஓர் உணவுப் பயிருக்குச் சாமானமாகவே கருதும்படி செய்தல் நமது நோக்கமாகும். இதுமட்டும் போதாது. பருத்தியைச் செட்டாகச் செலவழித்துக் கூடிய வரையில் அதிகமான பயன்படுத்திக் கொள்ள நூற்பவர்களுக்குக் கற்பிக்கவேண்டும். இந்த வேலையைச் சரிவரச் செய்வதற்குக் கதர்த் தொண்டர்களெல்லாரும் இராட்டை, கதிர் செய்யவும், செப்பனிடவும், பஞ்சு கொட்டவும், நெசவு நெய்யவுங் கூடப் பயிற்சி பெற்றிருத்தல் அவசியம். இவ்வாறு நன்கு பயிற்சி பெற்ற தொண்டர்கள்தான் கதர் உற்பத்தியை நிலையான அஸ்திவாரத்தின்மீது அமைக்க முடியும்.

வியாபாரத்திற்காகப் பெரிய அளவில் கதர் உற்பத்தி செய்தல் ஒருபுறமிருக்க, சொந்த உபயோகத்திற்காக நூற்றலுக்கும் வேண்டிய உதவி செய்து வருதல் அவசியம். ஐந்து பேருள்ள ஒரு குடும்பத்தில் ஒரே ஒரு இராட்டை தினம் சில மணி நேரம் சுழன்றுவந்தால்கூட, அந்தக் குடும்பத்துக்கு வேண்டிய அளவு நூல் கிடைத்துவிடுமென்பதைப் பலர் எண்ணிப் பார்ப்பதில்லை. இதுசம்பந்தமாகச் சந்தேகமுள்ளவர்கள் பின்வரும் புள்ளி விவரங்களைக் கவனிக்கவேண்டும் :—

(1) ஐந்துபேருள்ள ஒரு குடும்பத்திற்கு வருஷத்தில் 80 சதுர கஜம் துணி அதாவது மாதத்திற்கு $6\frac{1}{2}$ சதுர கஜம் துணி தேவையாயிருக்கும். (2) இந்த ஆறரை சதுர கஜம் துணி நெய்ய $1\frac{3}{4}$ ராத்தல் நூல் வேண்டும். (3) ஓர் இராட்டை தினம் இரண்டு மணிநேரம் வேலை செய்துவந்தால் ஒரு மாதத்தில் 15-ம் நம்பர் நூல் $1\frac{1}{4}$ ராத்தல் நூற்றுவிடலாம். ஆகவே குடும்பங்களும் சரி, தனி மனிதர்களும் சரி, கொஞ்சம் திடபுத்தியுடன்மட்டும் வேலை செய்தால், தங்களுக்கு வேண்டிய உடைகளைத் தாங்களே உற்பத்தி செய்துகொள்ளுதல் மிகவும் சுலபமாகும். தனிப்பட்டவர்கள் நூற்பதைப்பற்றிக் கூறியவை, பலர் ஒன்றுகூடி நூற்பதற்கும் பொருந்தும். பட்டணங்களில் இராட்டைச் சங்கங்கள் ஏற்படுத்துவதின்மூலம் சொந்த உபயோகத்திற்கு நூற்பதைப் பரவச்

செய்யலாம். * இவ்வாறு சொந்த உபயோகத்துக்கு நூற்றல் நாடெங்கும் பரவும்போதுதான் ஆடைத் தொழில் பழைய காலத்திலிருந்த உந்நத நிலைமைக்கு வரமுடியும். அந்நாளில் துணி உற்பத்தி செய்பவனே அதை உபயோகிப்பவனுயு மிருந்தான். எனவே, அத்தொழிலின் வளர்ச்சிக்கு இடை மனிதர்களோ, பெரிய மூலதனமோ தேவையா யிருந்ததில்லை. குடும்பத்தில் சொந்தத்துக்கு நூற்றுக்கொள்வதின் பொருளாதார நலத்தை நாம் ஒருமுறை கண்டுகொண்டால் பின்னர் அதை எப்போதும் கைவிடமாட்டோம்.

## முடிவுரை

ஆரம்பகாலத்தில் இராட்டை இயக்கத்தை நன்கு அமைக்கத் திறமையான மத்திய சங்கம் ஒன்று அவசியமேயாகும். இச்சங்கத்தார் நிதிகள் சேர்த்தும், கடன் கொடுத்தும், நெருக்கடியான சமயங்களில் சரக்குகள் வாங்கிக்கொண்டும், இயக்கம் சம்பந்தமான புள்ளி விவரங்களைச் சேகரித்தும், கிராம நிலைமையை நன்கறிந்த தொண்டர்கள் மூலம் தொழிலறிவைப் பரப்பியும், இன்னும் பலவிதங்களிலும் இயக்கத்துக்கு உதவி செய்து வர வேண்டும். ஆனல் நாளடைவில் தொழில் பரவப் பரவ, இச்சங்கத்தின் வேலைகளை ஒவ்வொன்ருய் நிறுத்திவந்து, கடைசியில் சங்கத்துக்குத் தேவையே யில்லாதபோது அதையும் முடிவுசெய்து விடவேண்டும். கதர்த்தொழில் சிறந்த நிலைமையின் கீழ் நடைபெறுங்கால் அது உள்ளூர்த் தொழிலாயிருக்கும்; அதே சமயத்தில் அது தேசியத் தொழிலாயு மிருந்துவரும். நூற்பவர்களும், நெசவுகாரர்களும், பருத்தி சாகுபடி செய்யும் குடியானவர்களும் இடைமனிதர்களின் உதவியை நாடாமல் ஒன்றுகூடி நேருக்குநேர் பேரம் நடத்திக் கொள்வார்கள். அத்தகைய நிலைமையில் ஓரிடத்தில் உற்பத்தியாகும் கதர் வேறிடத்துக்கு ஏற்றுமதியாதல் மிகவும் குறைவாயிருக்கும். உள்ளூரில் தேவையில்லாதபோது விசேஷ ரகங்கள்மட்டுமே ஏற்றுமதி செய்யப்படும். இந்நிலைமை ஏற்படுவதற்கு இன்னும் வெகுகால மாகலாம். ஆனல் இப்போதிருந்து நமது முயற்சிகளுக்கெல்லாம் அதுவே இலட்சியமாயிருத்தல் வேண்டும். அந்த இலட்சியம் கைகூடும்போதே ஏழை மக்களின் துன்பங்கள் நீங்கும். அவர்கள் இடைவிடாது தொழில் செய்து தேசியச் செல்வத்தைப் பெருக்கி வருவார்கள். நீண்ட

---

* ஓர் இராட்டைச் சங்கம் நன்கு நடைபெற வேண்டுமானல் அது சுமார் இருபது அங்கத்தினர் கொண்டதாயிருக்கவேண்டும். அங்கத்தினருக்குப் பஞ்சு கொட்டித் தரவும், நூலைச் சிட்டமாக்கிப் பத்திரப்படுத்தவும், மற்ற உதவிகள் செய்யவும் பஞ்சுகொட்டி ஒருவனை அமர்த்த வேண்டும்.

காலமாய் உபயோகிக்கப்படாமல் துருப்பிடித்திருக்கும் தேசமக்களின் பொருள் உற்பத்திசக்தி அப்போது பூரணமாய்ப் பயன்படுத்தப்பெறும். விவசாயிகளே நூல் நூற்பவர்களுமா யிருப்பார்க ளாதலின், அவர்கள் பருத்திப் பயிரையும் உணவுப்பயிருக்குச் சமானமாகக் கருதத் தொடங்கு வார்கள். மகசூல் நிறையக் கிடைக்கவேண்டுமென்றுமட்டும் பாராமல் பருத்தியின் தரத்தையும் கவனிப்பார்கள். அந்தப் பஞ்சைக் கொண்டு நூற்று செய்த துணியை அவர்களே உடுத்திக்கொள்ள வேண்டுமாதலால் துணி உறுதியாயிருப்பதற்குத் தக்க பருத்தியையே அவர்கள் பயிர்செய் வார்கள். தற்போது ஆங்கிலேயர் முதலிய அன்னிய நாட்டார் கண்ணுக் குப் பாரதநாடு ஒரு பருத்திப் பண்ணையாகவே காணப்பட்டுவருகிறது. ஆனால் மேற்கூறிய நிலைமை ஏற்படுங்காலத்தில், தேசம் புத்துயிர் பெற்ற ஒரு கலையுடனும், ஒரு தொழிலுடனும் மகிமை பொருந்தி விளங்கும். அன்னியத் துணி பகிஷ்காரத்தைத் தீவிரமாக நடத்தி உடைவிஷயத்தில் தேசமக்களின் மனோபாவத்தை மாற்றவேண்டும். அதேசமயத்தில் கிராமவாசிகளை உறக்கத்தினின்று எழுப்பித் தேசவிடுதலை இயக்கத்தில் முன்னிற்கும்படி செய்வதற்குத் திறமையான ஸ்தாபனம் ஒன்று ஏற்பட்டு வளர்ச்சி பெறவேண்டும். இவ்விருவகை முயற்சிகளும் நன்கு நடந்து வெற்றி பெறுங்காலத்தில் இந்தியா, கிரேட்பிரிட்டன் விரும்புவதுபோல் அன்னியத் துணி வாங்கும் சந்தையாயிராது. அதி ஆச்சரியமான தொழில் நலம் பெற்றது, தனக்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் தானே உற்பத்தி செய்துகொள்வது, திருப்தி கொண்டது, அதிகாரத் துக்கோ பணத்துக்கோ ஆசைப்படாதது, பேராசைகொண்டு பிறநாடு களைக் கட்டிச் சேர்க்க விரும்பாதது, தீரத்திற்கும் விடாமுயற்சிக்கும் ஒப்பற்ற உதாரணமாவது, கோரிய இலட்சியம் நிறைவேறப் பெற்றது— இத்தகைய மகிமை வாய்ந்த பாரதநாடு அப்போது தலை நிமிர்ந்து நின்று விளங்கும்.

---

அநுபந்தம்

## சர்க்கா சங்கத்தின் வேலை

தற்போது தேசத்தில் நடந்துவரும் கதர் வேலையின் பொறுப்பு முழுமையும் அகில இந்திய சர்க்கா சங்கத்தார் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். இச்சங்கத்தின் நிரந்தர பஞ்சாயத்து சபை அங்கத்தினரின் பெயர்கள் வருமாறு:—

சாசுவத அங்கத்தினர்

| | | |
|---|---|---|
| 1. | மகாத்மா காந்தி ... | அக்கிராசனர் |
| 2. | சேத் ஜம்னுலால் பஜாஜ் ... | பொக்கிஷதார் (தாற்காலிகத் தலைவர்.) |
| 3. | ஸ்ரீ ச. இராஜகோபாலாச்சாரியார் | |
| 4. | பாபு இராஜேந்திர பிரஸாத் | |
| 5. | ஸ்ரீ கங்காதர ராவ் தேஷ்பாண்டே | |
| 6. | ஸ்ரீ கொண்ட வேங்கடப்பையா | |
| 7. | ஸ்ரீ வல்லபாய் படேல் | |
| 8. | ஸ்ரீ சதீச சந்திர தாஸ் குப்தா | |
| 9. | பண்டித ஜவஹரிலால் நேரு | |
| 10. | ஸ்ரீ மணிலால் கோதாரி | |
| 11. | ஸ்ரீ சங்கர் லால் பாங்கர் ... | காரியதரிசி. |

தேர்ந்தெடுத்த அங்கத்தினர்

12. ஸ்ரீ வி. வி. ஜீராஜானி
14. டாக்டர் சுப்பிரமணியம்
15. ஸ்ரீ க. சந்தானம்

சர்க்கா சங்கத்தார் பின் வரும் மூன்று முறைகளில் வேலை செய்து வருகிறார்கள்:—

1. கதர் உற்பத்தியை அதிகப்படுத்தலும் அதை விநியோகித்தலும்.

2. தொண்டுக்காக நூற்றலையும், சொந்த உபயோகத்திற்கு நூற்றலையும் பரப்புதல்.

3. தேசத்தில் கதராபிமானத்தை வளர்த்தல்.

மேற்கண்ட எல்லாத் துறைகளிலும் சங்கத்தின் வேலை அபிவிருத்தியடைந்து வருகிறது.

1927-28-ம் ஆண்டில் தேசம் முழுவதிலும் மொத்தம் 60 லட்சம் சதுர கஜம் கதர் உற்பத்தியாயிற்று. இதன் பெறுமானம் 24 கோடி ரூபா யாகும். மாகாணவாரியாகக் கதர் உற்பத்தி விவரம் பின்வருமாறு:—

| | ரூ |
|---|---|
| ஆந்திர மாகாணம் | 2,94,083 |
| பீஹார் | 2,12,441 |
| வங்காளம் | 3,28,609 |
| டில்லி | 16,758 |
| குஜராத் | 36,649 |
| கர்னாடகம் | 73,970 |
| காஷ்மீரம் | 22,219 |
| மகாராஷ்டிரம் | 37,036 |
| பஞ்சாப் | 84,692 |
| இராஜஸ்தானம் | 1,41,710 |
| தமிழ் நாடு, கேரளம் | 9,97,466 |
| ஐக்ய மாகாணம் | 1,16,365 |
| உத்கலம் | 53,384 |
| மொத்தம் | 24,16,382 |

பொது ஜனங்கள் கொடுத்திருக்கும் 22 லட்ச ரூபாய் மூலதனம் போட்டுச் சர்க்கா சங்கத்தார் கதர் வேலை நடத்தி வருகிறார்கள். தற்போதைய கதர் உற்பத்தியை இயக்கத்தின் ஆரம்ப முயற்சியின் பலன் என்றே சொல்லலாம். குறிப்பிட்ட சில பிரதேசங்களில் பரிசோதனையாகச் செய்த வேலை இவ்வளவு பயன் தந்திருக்கிறது. தற்போது 2600 கிராமங்களிலேதான் கதர் வேலை நடைபெறுகிறது. அவ்வேலையில் நூற்பவர்கள் 97,900 பேரும், நெசவுகாரர்கள் 4,944 பேரும் ஈடுபட்டுப் பிழைத்து வருகிறார்கள். சென்ற ஆண்டில் மட்டும் நூற்பவர்களுக்கு ஆறு லட்ச ரூபாயும், நெசவுகாரர்களுக்கு எட்டு லட்ச ரூபாயும் விநியோகிக்கப்பட்டிருப்பதாய் மதிப்பிடப்பட்டிருக்கிறது. இவர்களெல்லாம்

மிகவும் வறிய நிலையி லுள்ளவர்கள். பயிற்சி பெற்ற தொண்டர்கள் இன்னும் அதிக பேருடைய உதவியைக்கொண்டு வேலையை விரிவுபடுத்தவும், புதிய பிரதேசங்களில் கதர் உற்பத்தி தொடங்கவும் சங்கத்தார் உத்தேசித்திருக்கின்றனர். நெசவு நயத்திலும், துணியின் உறுதிப்பாட்டிலும் எற்கனவே மிக்க அபிவிருத்தி எற்பட்டிருக்கிறது. பலவகை மனிதர்களும் பிரியப்படக்கூடிய பற்பல ரகமான துணிகள், சாய வேஷ்டிகள், அச்சு வேஷ்டிகள் முதலியவை உற்பத்தி செய்யும் துறையில் நல்ல வேலை நடந்திருக்கிறது. ஆனால் அடியோடு நசித்துப்போன ஒரு பெரிய தொழிலைப் புனருத்தாரணம் செய்வதென்பது எளிய காரியமன்று.

வியாபார முறையில் கதர் உற்பத்தி செய்தல் ஒருபுற மிருக்க, சொந்த உபயோகத்திற்கு நூற்றலைப் பரவச் செய்வதற்கும் சங்கத்தார் தக்க முயற்சி எடுத்திருக்கிறார்கள். இவ்வழியில் இராஜஸ்தானத்தி லுள்ள பிஜோலியாவிலும், குஜராத்தில் பர்தோலி முதலிய கிராமங்களிலும் நல்ல வேலை நடந்திருக்கிறது. விடாமுயற்சியுடன் செய்த பிரசாரத்தின் பயனாகத் தற்போது பிஜோலியாவில் மட்டும் 5500 ஜனங்கள் தங்கள் வீட்டில் நூற்ற நூலைக்கொண்டு தங்களுக்கு வேண்டிய உடைகள் முழுமையும் தயார் செய்து கொள்கிறார்கள். அவர்களுடைய நூலைக்கொண்டு மொத்தம் 86,000 சதுர கஜம் துணி உற்பத்தி செய்யப்பட்டது. சர்க்கா சங்கத் தொண்டர்கள் வருவதற்கு முன்பு இவ்விடத்தில் இராட்டையே கிடையாதென்பதை முக்கியமாகக் கவனிக்கவேண்டும். இதுபோன்ற வேலை சிறு அளவில் ஆந்திரம், குஜராத், தமிழ்நாடு முதலிய மாகாணங்களிலும் நடந்துவருகிறது. பஞ்சாப்பில் கைராட்டை நூலை வாங்கிக் கொண்டு பதிலுக்குக் கதர் கொடுக்கும் முறை பரிசோதிக்கப்பட்டு வருவதாய் அறிகிறோம். தமிழ் நாட்டில் ஓரிடத்திலும், வங்காளத்தில் காதி பிரதிஷ்டான சபையார் வேலை நடத்தும் இடங்கள் சிலவற்றிலும் மேற்கூறிய முறையை அநுசரிக்க எற்பாடு நடந்துவருகிறது. பஞ்சு கொட்டும் வில்லையும், இராட்டையையும் அபிவிருத்தி செய்வதற்குச் சர்க்கா சங்கத்தார் சிறந்த முயற்சி செய்திருக்கிறார்கள். இதனால்தான் சொந்தத்திற்கு நூற்றல் இந்த அளவிலாவது பரவுதல் சாத்தியமாயிற்று. தொழில் முறை அபிவிருத்திகளைக் கவனிப்பதற்கென்று சர்க்கா சங்கத்தின் தனி இலாகா ஒன்றைக் காலஞ் சென்ற ஸ்ரீ மகன்லால் காந்தி எற்படுத்தினார். இந்த இலாகாவினால் ஒரு பள்ளிக்கூடம் நடத்தப்பட்டு வருகிறது. அத்துடன் நூல், துணி உற்பத்தி சம்பந்தமாகச் சங்கத்தின் கிளை ஸ்தாபனங்கள் எல்லாவற்றிற்கும் மேற்படி இலாகா வேண்டிய யோசனைகள் சொல்லி உதவி செய்து வருகிறது.

சர்க்கா சங்கத்தின் உதாரணத்தைப் பின்பற்றி, சில சுதேச சமஸ்தானங்கள் கதர் இயக்கத்துக்கு ஆதரவளிக்க முன் வந்திருக்கின்றன. மைசூர் அரசாங்கத்தார் பதன்வால் என்னுமிடத்தில் கதர் உற்பத்தி ஸ்தாபனம் ஒன்றை ஏற்படுத்தினர். இங்கு வேலை திருப்தி யளித்திருப்பதின் பயனாக, இன்னும் சில விடங்களிலும் கதர் வேலை தொடங்க அவர்கள் தீர்மானித்திருக்கிறார்கள். பதன்வாலில் இப்பொழுது 2000 பேர் நூல் நூற்பதாகவும் வருஷத்தில் ரு. 25,000 பெறுமான கதர் உற்பத்தியாவதாகவும் கடைசியாக வந்த அறிக்கைகளிலிருந்து அறிகிறோம். மைசூர் அரசாங்கத்தார் எவ்விதத் தயக்கமுமின்றி சர்க்கா சங்கத்தின் ஒத்துழைப்பை ஏற்று இவ்வேலையை நடத்தி வருதல் குறிப்பிடத்தக்கது.

தனிப்பட்டவர்களின் முயற்சியே தமிழ் நாட்டில் கதர் இயக்கத்துக்கு மூலகாரணமாயிருந்தது. தற்போது தமிழ் நாட்டிலும், ஆந்திர தேசத்திலும், சர்க்கா சங்கத்தாரின் உதவியும் ஆதரவும் பெற்ற தனிப்பட்ட வியாபாரிகள் வருஷத்தில் ஐந்தாறு லட்ச ரூபாய் பெறுமான கதர் உற்பத்தி செய்து வருகிறார்கள். ஒவ்வொரு மாகாணத்திலும் சர்க்கா சங்கத்தின் வேலை நிலையான அஸ்திவாரத்தின்மேல் அமையும்போது, தனிப்பட்டவர்கள் கதர்த் தொழிலில் மேலும் மேலும் அதிக மூலதனம் போட முன்வருவார்க ளென்பதில் சந்தேகமில்லை.

சர்க்கா சங்கத்தின் முயற்சியினால் இதுகாறும் கிடைத்திருக்கும் பயன்களுள் முக்கியமானது தேசத்தில் உண்மையான கதரபிமானம் பரவியிருப்பதேயாகும். பெருந்திரளான ஜனங்கள் மற்ற எல்லாத் துணிகளையும் விலக்கிக் கதரையே யணிவது என்று உறுதிகொண்டிருக்கிறார்கள். இத்தகைய கதரபிமானமே சர்க்கா சங்கத்தார் மேலே தங்கள் வேலையை விரிவு படுத்துவதற்கு ஆதாரமா யிருத்தல்வேண்டும். இன்னும் இயக்கம் ஆரம்ப நிலையிலேயே யிருந்துவருகிறது. வருங்காலத்தில் அதன் வளர்ச்சியைக் குறித்துத் திட்டமாக எதுவும் சொல்ல முடியாது. ஆனால் ஒன்று கூறலாம். தற்போது பல துறைகளிலும் நடந்துவரும் வேலையானது நிச்சயம் பயனளித்தே தீரும். பஞ்ச நிவாரணமாகவோ, விவசாயிகள் வீண்போக்கும் காலத்துக்கு வேலையாகவோ வியாபார முறையில் கதர் உற்பத்தி செய்தல், சொந்த உபயோகத்துக்கு நூற்றலைப் பரவச்செய்தல், நூலுக்குப் பதிலாகத் துணி கொடுத்தல் ஆகிய இந்த வேலைகளெல்லாம் வருங்காலத்தில் பயனளியாமற்போகா. அப்போது, மாண்டுபோன பழைய தேசியக் கைத்தொழில் புத்துயிர் பெற்றுச் செழித்து வளர்வதை மட்டுமன்றி, சுதந்திர இலட்சியம் நெருங்கி யிருப்பதையும் கண்டு தேசமக்கள் மகிழ்ச்சி யடைவார்கள்.